

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன்

அல்லாஹ்வின் பெயரால் ஆரம்பிக்கிறேன்

தலைப்புக்குச் செல்ல படத்தில் கிளிக் செய்யுங்கள்





1. முஸ்லிம்களின் நகரில் ஓயாத சப்தம்.



2. முஸ்லிம்களிடத்தில் அதான்.



3. இடப் புறத்திலிருந்து வலப் புறம் வரை.

தலைப்புக்குச் செல்ல படத்தில் கிளிக் செய்யுங்கள்






அதான் உற்பத்தியைப் பாதிக்குமா?




அதானின் கதை எவ்வாறு ஆரம்பித்தது?




அதான் சொல்பவரின் சிறப்பு.

தலைப்புக்குச் செல்ல படத்தில் கிளிக் செய்யுங்கள்






தொழுகை இஸ்லாத்தின் தூணும், மாபெரும் அடிப்படையும்.




லா∴ப்காடியோர்னும்,
பிலால் இப்னு ரபாஹூாவும்.




அதானின் அர்த்தங்கள்.



# முஸ்லிம்களின் நகரில் ஓயாத சப்தம்.

முஸ்லிம்கள் வாழும் ஏதாவது ஓர் நகரத்தினுள் ஒருவருக்கு செல்ல நேர்ந்தால், அங்கு பள்ளிவாயில்களையும், அவற்றில் உள்ள உயர்ந்த மினாராக்களையும் அவரால் காணக்கூடியதாக இருக்கும். சலசலப்பும், பரபரப்பும் நிறைந்த மனித வாழ்க்கைக்கு மத்தியில் அம் மினாராவில் இருந்து ஓர் அழைப்பு வெளிப்படும். அவ் அழைப்பானது வாழ்க்கைச் சக்கரத்தையும், அது கொண்டிருக்கும் சமனிலையையும்



தலைப்புகளுக்கு...

கட்டுப்படுத்தும் ஓர் ஓசையாகவே காற்றில் மிதந்து வரும். இது பற்றி ‘ஜெரார்ட் டி நெர்வால்’ என்பவர் தனது ‘கிழக்குச் சுற்றுலா’ எனும் நூலில் இவ்வாறு குறிப்பிடுகிறார், “முதல் முதலாக சாந்தமான, தெளிவான ஓர் அறிவிப்பாளரின் ஓசையைக் கேட்கும் போது வர்ணிக்க முடியாத அளவுக்கு ஓர் உணர்வு என் உடல் முழுதும் பரவியது. அப்போது என் மொழிபெயர்ப்பாளரிடம், ‘இவ் அறிவிப்பாளர் என்ன கூறுகிறார்?’ எனக் கேட்டேன்.





தலைப்புகளுக்கு...

அதற்கு அவர், ‘அவர், ‘அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் கிடையாது’ எனக் கூறுகிறார்’ என்றார். அதற்கடுத்து என்ன கூறினார்? எனக் கேட்டேன்.

அதற்கு அவர், ‘தூங்கிக் கொண்டிருப்போரைப் பார்த்து, ‘தூக்கத்தில் இருப்பவர்களே!, எப்போதும் உறங்காமல் உயிருடன் இருப்பவனிடம் உங்கள் பிரச்சினைகளை பாரம்சாட்டுங்கள்’ என்ற கருத்தில் கூறுகிறார் என்றார்”.

## அது என்ன அறிவிப்பு? அதன் விபரம் என்ன?





## முஸ்லிம்களிடத்தில்

# அதான்.

முஸ்லிம்களிடம் அதான் ஓர் பெரும் பங்கை வகிக்கிறது. அதைக் கேட்போர் உள்ளங்களில் அமைதியையும், அன்பையும் ஏற்படுத்தும் ஓர் ஓசையாக அது இருக்கிறது. திரும்பத் திரும்ப கேட்பதால் அதில் சலிப்பு தட்டுவதில்லை. ஏனெனில் இறைவனுடனான தொடர்பை வலுப்படுத்தும் வகையில், ஒவ்வொரு நாளும் ஐந்து தடவைகள் தாம் நிறைவேற்ற வேண்டிய மாபெரும் கடமையை அது நினைவுபடுத்துகிறது.

அழிவுறும் உலகில், பல வேலைப்பளுக்கு மத்தியில், அல்லாஹ்வின் கட்டளைகளை அமுல்படுத்துமாறும், அவனின் வழிகாட்டல்களை மறக்கக் கூடாதென்றும் திரும்பத் திரும்ப நினைவுபடுத்துவது இவ் அதான் ஒன்றே.

ஏக இறைவனை நினைவூட்டுவதாலும் உயிருடன் இருக்கும் அனைத்தும் அதைக் கேட்க வேண்டுமென்பதாலும் இவ் இதமான ஓசையில் சலிப்புக்கு இடமில்லை. இதன் ஆழமான அர்த்தம் தம் சிந்தனையில் பதிய வேண்டுமெனவும், ஆரோக்கிய உள்ளத்தை இன்பமுறச் செய்யும், நோயுற்ற உள்ளத்தை விரண்டோடச் செய்யும் இவ் ஓசையின் அறிவிப்பாளருக்கு, பல சிறப்புகளைப் பெற்றுக் கொடுக்க வேண்டுமெனவும் இவ் அறிவிப்புக்கு முஸ்லிம்கள் கட்டுப்படுகின்றனர். விரண்டோடும் உள்ளத்தின் தலைவனாக ஷைத்தான் இருக்கிறான். நபி (ஸல) அவர்கள் கூறினார்கள், "தொழுகைக்காக (அதான் என்ற) அழைப்புக் கொடுக்கப்படும்போது, அதான் சப்தத்தைக் கேட்கக் கூடாது என்பதற்காகச் சப்தமாகக் காற்றுப் பிரிந்தவனாக ஷைத்தான் புறமுதுகு காட்டி ஓடுகிறான்." (புஹாரி 608).

எட்வர்ட் வில்லியம் லேன் என்பவர், தனது ‘நவீன எகிப்தியர்களின் நிலமைகளும், பழக்கவழக்கங்களும்’ எனும் நூலில், ‘அதானின் ஓசை மதிமயக்கக் கூடியது. குறிப்பாக இரவின் அமைதியில்’ என்கிறார்.

நபி (ஸல்) அவர்கள் காலத்து மக்கள் அதான் ஒலிக்கக் கேட்டால், அதான், தொழுகை எனும் இரு வணக்கத்தையும் கேலி செய்வார்கள். புத்திக் குறைவும், மடமையும் சீரான சிந்தனையில் அவர்களைச் செலுத்தாமல், கேலி செய்யும் பாணியைத் தோற்றுவித்திருந்தது. சிறிதளவு சிந்தனையும், குறைந்தளவு புலனும் அவர்களுக்கு இருந்திருந்தால், இவ் அதான் கூறவரும் பெரும் அற்புதங்களையும், உயர் அர்த்தங்களையும் அவர்கள் விளங்கியிருப்பார்கள். இவ்வாறு மடமையாகவும், முட்டாள் தனமாகவும் இருந்திருக்க மாட்டார்கள். அல்லாஹ் கூறுகிறான், “தொழுகைக்காக நீங்கள் அழைத்தால் அவர்கள் அதனைக் கேலியாகவும், விளையாட்டாகவும் எடுத்துக் கொள்வார்கள். நிச்சயமாக இவர்கள் விளங்கிக் கொள்ளாத கூட்டமாக இருப்பதே இதற்குக் காரணாகும்” (அல்குர்ஆன் 05:58).



வியக்கத்தகு சம்பவம்

## இடப் புறத்திலிருந்து வலப் புறம் வரை.

நபியவர்கள் காலத்தில் சில முஸ்லிமல்லாத வாலிபர்கள் அதான் ஒலிக்கக் கேட்டால் கேலியாக, அதே போன்றே கூறுவார்கள். இதைக் கேட்டுக்கொண்டிருந்த நபியவர்கள், “உங்களில் சப்தம் உயர்த்தியவர் யார்?” எனக் கேட்டார்கள். அங்கிருந்தவர்கள், அபூ மஹ்தூரா எனப்படும் வாலிபரைக் காட்டி, அவரை நபியவர்கள் முன்னிலையில் கொண்டு வந்தனர். நபியவர்களோ அபூ

மஹ்தூராவின் ஓசை நயத்தையும், துயர்ந்து கூறும் திறனையும் கண்டு, அதைத் தீய முறையில் பயன்படுத்தியதற்கு மாற்றமாக, அனைவருக்கும் நன்மை பயக்கும் வகையில், நல்ல முறையில் பயன்படுத்த முனைந்தார்கள். அவரிடம், ''எழுந்து அதான் கூறு'' எனக் கூறி, அதானை அவருக்குக் கற்றுக் கொடுத்து, ''உனக்கு அல்லாஹ் பரக்கத் செய்வானாக!'' என அவருக்காக பிரார்த்தித்தார்கள். அவருக்கு அல்லாஹ் இஸ்லாத்தின் நேர்வழியை வழங்கினான். மக்காவில் நபியவர்களின் முஅத்தினாக – அறிவிப்பாளராக – அவர் மாறினார். அதானைக் கேலி செய்யும் இறைநிராகரிப்பாளராக இருந்தவர், நபியவர்களின் பிரியத்திற்குரிய முஅத்தினாகவும், (உலக மக்களுக்கு அழைப்பு விடுபவராகவும்), இறை நேசராகவும் மாறிவிட்டார். (முஸ்னத் அஹ்மத் 15380).



# அதான் உற்பத்தியைப் பாதிக்குமா?

மனித வாழ்வின் இயல்போடும், உலக ஆதாயங்களோடும் அதானும், தொழுகைக்கான அதன் அழைப்பும் எப்போதும் முரண்படாது. அல்லாஹ்வை நெருங்குவதற்கும், ஆன்மீகத்தை புத்துயிர்ப்பிக்கவும், உளக்கசடுகளை நீக்கி, ஆன்மீக புத்துணர்ச்சியை ஏற்படுத்தவுமான குறுகிய நேரமாகவே அது இருக்கிறது. இது தவிர்ந்த ஓர் நாளின் ஏனைய நேரங்கள் அனைத்தும் ஆகுமான உலகாதாயங்களில்

ஈடுபடுவதற்கான பரந்த சந்தர்ப்பமாகவே ஏற்படுத்தப்பட்டுள்ளன.

அதானை அலட்சியப்படுத்தி, பள்ளிவாயிலுக்கு வராமல் இருப்போர் நினைப்பதைப் போன்று உளத் தேவைகளுக்கும், உடல் தேவைகளுக்கும் இடையில் முரண்பாடுகளை இஸ்லாம் ஏற்படுத்தவில்லை. மாறாக அவை இரண்டும் பூரணமான பிரமிப்பான இணைப்புகள். அவை இரண்டையும் சமநிலையில் வைத்திருப்பவன் மனக்குழப்பங்களை விட்டும் நீங்கி, இவ்வுலகில் அதிக உற்பத்திகளைப் பெருக்கி, மறுமையில் நன்மைகளைப் பெற்றிட முடியும். அல்லாஹ் கூறுகிறான், “நம்பிக்கை கொண்டோரே! வெள்ளிக்கிழமை தினத்தில்



தொழுகைக்காக அழைப்பு விடுக்கப்பட்டால், அல்லாஹ்வை நினைவு கூர்வதன்பால் நீங்கள் விரைந்து செல்லுங்கள். இன்னும், வியாபாரத்தையும் விட்டுவிடுங்கள். நீங்கள் அறிந்து கொள்பவர்களாக இருந்தால் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். தொழுகை முடிக்கப்பட்டதும் பூமியில் நீங்கள் பரந்து சென்று, அல்லாஹ்வின் அருளிலிருந்து தேடிக்கொள்ளுங்கள். மேலும், நீங்கள் வெற்றிபெறும் பொருட்டு அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூருங்கள்.'' (அல்குர்ஆன் 62:09-10).



# அதானின் கதை எவ்வாறு ஆரம்பித்தது?

கிபி 570 – 632 காலப்பகுதியில் மக்காவில் நபி (ஸல்) அவர்களும், அவரின் தோழர்களும் தொழுகைக்காக அதான் கூறி, அதற்காக கூடவில்லை. ஏனெனில் இறை நிராகரிப்பாளர்கள் இவர்களை துன்புருத்தி வந்தனர். அவர்களிடம் அகப்படாமல் தம்மால் முடியுமான வரை பள்ளத்தாக்குகளிலும், வீடுகளிலும் தனித்தனியாகவும், இரண்டிரண்டு பேராகவும் தொழுகையை நிறைவேற்றி வந்தனர். மதீனாவுக்கு

ஹிஜ்ரத் மேற்கொண்ட பின் கூட்டாகத் தொழும் முறை கடமையாகியது. தொழுகைக்கான நேரத்தை ஒவ்வொருவரும் கணிப்பிட்டு, பள்ளிவாயிலுக்கு சென்று, தொழுது வந்தனர். இதற்காக நேரகாலத்துடன் வருபவர்களுக்கு தமது தொழில் தாமதமாகியது. தாமதித்து வருபவர்களுக்கு தொழுகை தாமதமாகியது. இது சிக்கலை ஏற்படுத்தவே, நபி (ஸல்) அவர்கள் தன் தோழர்களுடன், தொழுகையின் நேரம் நுழைந்துவிட்டதை அறிவிப்புச் செய்ய ஆலோசனை கேட்டார்கள். ஒவ்வொருவரும் அக்காலத்தின் வசதிகளுக்கேற்ப ஆலோசனை வழங்கினார்கள். சிலர் யூதர்கள் போன்று சங்கு ஊதலாம் எனவும், சிலர் கிறிஸ்தவர்கள் போன்று மணி அடிக்கலாம் எனவும், சிலர் நெருப்பு மூட்டலாம், அல்லது கொடி பறக்கவிடலாம் எனவும் ஆலோசனை வழங்கினர். இவை எதுவும் நபி (ஸல்) அவர்களுக்கு திருப்தியளிக்கவில்லை. அன்றைய இரவு அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரழி) அவர்கள், ஓர் மனிதர் தன்னிடம் வந்து

அதானின் வார்த்தைகளை சொல்லிக்கொடுப்பதைப் போன்று கனவு கண்டார்கள். உடனே தான் கண்ட கனவை நபியவர்களிடம் கூற, நபியவர்களும், “இது உண்மையான கனவு” என்றார்கள்.

பின்னர் அவ்வார்த்தைகளை பிலால் இப்னு ரபாஹா (ரழி) அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கச் சொன்னார்கள். ஏனெனில் பிலால் (ரழி) அவர்கள் உயர்ந்த சப்தமிக்கவர்களாக இருந்தார்கள். அன்றிலிருந்து இன்று வரை முஸ்லிம் உலகின் அனைத்துப் பாகங்களிலும் தொடர்ந்தும் ஒலிக்கும் பிரபல்யமான ஓசையாக அதான் மாறிவிட்டது. (அபூதாவுத் 498).



# அதான்

## சொல்பவரின் சிறப்பு.

சிறப்பு வாய்ந்த அதானைக் கூறும் முஅத்தினுக்கும் – அறிவிப்பாளர்- பல சிறப்புகளும், உயர்ந்த கூலிகளும் இருக்கின்றன. மறந்தவர்களுக்கு நினைவுபடுத்துகிறார். களைப்படைந்தோரை உற்சாகப்படுத்துகிறார். அதான் ஓசையைக் கேட்டு தொழக்கூடிய முஸ்லிம்களது தொழுகையின் அளவு நன்மைகளைப் பெறுகிறார். அதானின் சிறப்பையும், அதன் உயர் அந்தஸ்த்தையும் அறிந்தவர் அதான்

கூறுவதற்காக போட்டியிடுவார் எனவும், சீட்டுக்குலுக்கிப் போட்டாவது தொழுகைக்காக மக்களை அழைப்போரை தான் விரும்புவதாகவும் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். “அதான் சொல்வதற்குரிய நன்மையையும், முதல் வரிசையில் நின்று (தொழுவதற்குரிய) நன்மையையும் மக்கள் அறிவார்களானால் அதற்காக அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு வருவர். யாருக்கு அந்த இடம் கொடுப்பது என்பதில் சீட்டுக் குலுக்கியெடுக்கப்படும் நிலையேற்பட்டாலும் அதற்கும் தயாராகி விடுவார்;” (புஹாரி 615). இதனாலே உமர் (ரழி) அவர்கள் -இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் இரண்டாம் கலீபா- தன் ஆட்சிப் பொறுப்பில் பாரிய சுமைகள் இருக்காவிட்டால் முஅத்தினாக இருப்பதற்கு அதிக ஆசை கொண்டார்கள். “ஆட்சிப் பொறுப்புடன் அதானும் சொல்ல முடியுமாக இருந்திருப்பின் நான் அதானையே சொல்லியிருப்பேன;” (பைஹகீ 2041).



# தொழுகை இஸ்லாத்தின் தூணும், மாபெரும் அடிப்படையும்.

இஸ்லாத்தின் இரண்டாவது கடமையான தொழுகைக்காக மக்களை அழைப்பதால் அதானுக்கு தனித்துவமான இடமிருக்கிறது. தொழுகையின் மூலமே ஒருவர் முஸ்லிமாக நோக்கப்படுகிறார். மேல் தளம் வீழ்ந்திடாமல் காக்கும் தூண்களைப் போன்று தொழுகை இஸ்லாத்தை சுமந்திருக்கிறது. இதன் மூலம் அன்றைய தின கவலைகள், சஞ்சலங்கள்

போன்றவற்றிலிருந்து ஒருவரின் உள்ளம் அமைதியடைகிறது. தன் இறைவனுடனான தொடர்பிற்கும் வழுசேர்க்கிறது.

அமைதியாகவும், பயபக்தியுடனும் தொழுகையை நிறைவேற்றுபவருக்கு மாத்திரமே பூரண அமைதியும், முழுமையான உளவியல் ஆரோக்கியமும் கிடைக்கிறது. இது முஸ்லிம்களிடம் நடைமுறையில் காணும் ஓர் அம்சமாகும். இதனாலே நபி (ஸல்) அவர்கள் பிலால் (ரழி) அவர்களைப் பார்த்து, "பிலாலே, தொழுகைக்காக அழையும், அதனால் எம்மை அமைதிப்படுத்தும்" எனக் கூறுவார்கள். (அபூதாவுத் 4985).

தொழுகையை விடாமல் தொழுவதினாலே ஓர் இறைவிசுவாசி மன அமைதி அடைகிறான். அதை நிறைவேற்றும் முறை, இரவு பகல் வேளைகளில் அதன் எண்ணிக்கை போன்ற 1400 வருடங்களுக்கு முன்னாலே நபியவர்கள் கற்றுத் தந்த முறையில் நிறைவேற்றுவோரே மன அமைதியை சரியான முறையில் பெறுவர்.





# லா.ஃப்காடியோர்னும், பிலால் இப்னு ரபாஹாவும்.

லா.ஃ.ப்காடியோர்ன் எனும் எழுத்தாளர் இஸ்லாத்தின் முதல் முஅத்தினாகிய பிலால் இப்னு ரபாஹா (ரழி) பற்றி சிறு குறிப்பொன்றைக் கூறுகிறார், "கிழக்குத் திசை நகர சுவர்களுக்கு மத்தியில், அங்குள்ள களங்கரை விளக்கிற்கு அருகில் முதன் முறையாக ஒய்வெடுக்கும் ஓர் சுற்றுலாப் பயணி, தொழுகைக்கான முஸ்லிம்களின் அழகான, உள்ளத்திற்கு நெருக்கமான அழைப்பைக் கேட்பதைத் தவறவிடுவது குறைவாகவே இருக்கும்" "ஒருவர்

வாசிப்பிற்காக சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்தால் அவரின் உள்ளத்தில் இப் புனித அழைப்பின் ஒவ்வொரு வார்த்தையும் பதிந்துவிடும். ரீங்காரமிடும் அறிவிப்பாளரின் ஒவ்வொரு ஓசைச் சரத்திலும் அவ் அழைப்பின் ஒவ்வொரு பகுதியையும் தெளிவாக அறிய முடியும். எகிப்து, சிரியா என எங்கிருந்தாலும் பூமியின் அதிகாலை தன் பிரகாசத்தை கொஞ்சம் கொஞ்சமாக வானுக்கு அனுப்பி, அங்குள்ள நட்சத்திரங்களை பிரகாசிக்கச் செய்தாலும், மீண்டும் அவ் ஒளி பூமியின் கிழக்குத் திசைக்கு வருவதற்கு முன் நான்கு தடவைகள் இவ் அதான் ஓசையை அவரால் கேட்க முடியும். ஒளிரும் பளபளப்பான பகல் வேளையில் அதனைக் கேட்பார். செக்கச் சிவந்த புத்துணர்ச்சி வண்ணங்களில் மேற்கு வானம் இருக்கும் போது அதைக் கேட்பார். சூரியன் மறைந்து, இப் பிரகாசமான வண்ணங்கள் ஆரஞ்சு மற்றும் மரகதத்தின் இரட்டை சாயத்தில் நுழையும் போதும் அதைக் கேட்பார். அடுத்த அதானை பள்ளிக்கு மேல் இருக்கும் ஊதா நிற குப்பாவுக்கு அப்பால் பல மில்லியன் கணக்கான நட்சத்திரங்கள் ஒளிரும் போது கேட்பார்”



தலைப்புகளுக்கு...



# அதானின் அர்த்தங்கள்.

நடுத்தர சிந்தனையுடன் இருக்கும் ஒருவருக்கு இவ் உயரிய அழைப்பின் அர்த்தங்கள் தெளிவாகப் புரிந்திடும். இவ் அழைப்பு உலக கேளிக்கைகள், அதில் அதிகம் ஈடுபடுத்துபவைகள், ஆண்மாவின் புனிதத்தை சீர்குழைப்பவைகள் என அனைத்தையும் விட்டுவிட்டு அல்லாஹ்வின் பக்கம் வருமாறு அழைக்கிறது. உலகில் மனிதனுக்கு எவை எல்லாம் பெறுமதியானதோ அவற்றை விடவும் அல்லாஹ் மிகப் பெரியவன். உலகை விடவும் மகத்தான ஒன்றை

புறக்கணிப்பது எவ்வகையிலும் நியாயம் ஆகாது!!

திரும்பத் திரும்ப இடம்பெறுபவைகளைத் தவிர்த்து அதான் ஆறு வாசகங்களைக் கொண்டுள்ளது.

***அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்:*** (அல்லாஹ் மிகப் பெரியவன்). இது நான்கு தடவைகள் கூறப்படும். இது கேள்வியை எழுப்பத் தூண்டும் ஆரம்ப வாசகங்கள்!! அல்லாஹ் எதை விடப் பெரியவன்?! என இதில் இடம்பெற்றிருக்காது.

ஏனெனில் இதற்கான பதிலை நீங்களே நிரப்பிக் கொள்ளலாம். அல்லாஹ் அனைவரை விடவும், அனைத்தை விடவும் மிகப் பெரியவன்...

தொழுகை நெருங்கும் வேளையில் நீங்கள் செய்யும் எந்தக் காரியத்தை விடவும் அல்லாஹ்வே மிகப் பெரியவன். இதனால் அல்லாஹ் உங்களை அழைக்கும் போது அவற்றை நிறுத்திவிட்டுச் செல்ல வேண்டும்.

அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹ்: (உண்மையாக வணங்கப்படுவதற்குத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என சாட்சி கூறுகிறேன்). இதை நீங்கள் நம்பிவிட்டால் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும், எதையும் வணங்கமாட்டீர்கள். தொழிலை வணங்கமாட்டீர்கள். ஆசையை, வெற்றியை, இன்பத்தை என எதையும் வணங்கமாட்டீர்கள். வணக்கம் என்பது வெறும் உடல் அசைவுகள் மாத்திரம் கிடையாது. அனைத்தை விடவும் அல்லாஹ்வுக்கான வழிபாட்டை முதன்மைப்படுத்த வேண்டும். இதனால் ஓர் முஸ்லிம் இவ் வாசகத்தைக் கூறினால் தன் வாழ்வில் இதை விடப் பெரியது எதுவுமில்லை என நம்பிக்கை கொள்கிறான். அதுவே அவனின் வாழ்வுக்கு அர்த்தம் கொடுக்கிறது.

அஷ்ஹது அன்ன முஹம்மதன் ரஸூலுல்லாஹ்: (முஹம்மத் அல்லாஹ்வின் தூதர் என சாட்சி கூறுகிறேன்). முஹம்மத் (ஸல்) அவர்கள் இவ்வுலகுக்கான அல்லாஹ்வின் தூதராவார். அவருக்கு முன்னாலும் நூஹ் (அலை), இப்றாஹிம் (அலை), மூஸா அலை, ஈஸா (அலை) போன்ற நபிமார்கள் அனுப்பப்பட்டார்கள். அவர்கள் அனைவரது அழைப்பும், 'அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ்' என்பதை அடிப்படையாகக் கொண்டே இருந்துள்ளது.

ஹய்ய அலஸ் ஸலாஹ்: (தொழுகைக்கு விரைந்து வாருங்கள்). இங்கு முஅத்தின் நேரடியாகவே தொழுகைக்கு வருமாறு அழைக்கிறார். தொழுகை என்பது உலகாதாயங்களுடனான தொடர்பை துண்டித்து, இறைவனுடனான தொடர்பை வலுப்படுத்துகிறது. பணக்காரன், ஏழை, கறுப்பன், வெள்ளையன், சிறியவர், பெரியவர் என வித்தியாசம் பாராது அனைவரும் பள்ளியில் தொழுகைக்காக ஒன்று சேர்கின்றனர். தொழுகை நபிமார்களுக்கும் கடமையாக்கப்பட்டிருந்தது. ஏனெனில் இது மனிதனுக்கு வாழ்வைத் தொடர்வதற்கான மன அமைதியையும், அல்லாஹ்வின் விதியை ஏற்கும் மனோபாங்கையும் ஏற்படுத்துகிறது.

ஹய்ய அலல் ∴பலாஹ்: (வெற்றியின் பக்கம் விரைந்து வாருங்கள்). தன்னை மாத்திரம் வணங்கி, தன்னை மாத்திரம் தூய்மைப்படுத்த வேண்டுமென்பதற்காகவே மனிதனை அல்லாஹ் படைத்தான். இவ் வணக்கத்தை சரியான முறையில் அவன் நிறைவேற்றிவிட்டால் சுவனம் எனும் உண்மையான வெற்றியை அடைந்திடுவான். இவ் வெற்றிக்காக நஷ்டங்களையும், அர்ப்பணிப்புகளையும் சுமக்கத் தயாராகிவிடுவான். சுவனத்தை அடைவதென்பது இவ்வுலகில் உள்ள அனைத்து மனிதர்களின் குறிக்கோளாக இருக்கிறது. சுவனத்தை ஒருவன் இழந்துவிட்டால் இவ்வுலகில் பெறுமதியானவைகளை வைத்திருந்தும் என்ன பயன்?!

*அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்:, லாஇலாஹ இல்லல்லாஹ்:*

அல்லாஹ்வை மகத்துவப்படுத்தி, ஏகத்துவத்தை முழங்கி எவ்வாறு முஅத்தின் அதானை ஆரம்பித்தாரோ அவ்வாறே அதை நிறைவும் செய்கிறார். ஏனெனில் இவ்வாசகங்களின் அர்த்தம் இறைவிசுவாசிகளின் உள்ளங்களில் ஆணித்தரமாகப் பதிய வேண்டும். உலக விடயங்களில் எந்த ஒரு துரும்பும் அவ் அதானிற்கு பதில் அளிக்காமல் இருப்பதற்குத் தடையாக இருக்கக் கூடாது. இவ்வுலகில் அல்லாஹ்வைத் தவிர மற்ற அனைத்தும் அற்பமானவையே.

# மனித படைப்பிற்குக் காரணமான அவ் உயரிய வாசகம்

மனிதன் படைக்கப்பட்டதன் நோக்கத்தைக் கூறும் வாசகம்:(லாஇலாஹ இல்லல்லாஹ்)

இவ் உயரிய, நிரந்தரமான வாசகம் இஸ்லாத்தின் தூதைக் குறிக்கிறது. இஸ்லாத்தின் முதல் தூணாகவும் இருக்கிறது: (எவ்வித இணையுமற்ற அல்லாஹ் ஒருவனையே வணங்கி, அவனுக்குக் கட்டுப்பட்டு, அவனுக்கு மாத்திரமே பயபக்தியோடு இருத்தல்). இதற்காகவே மனிதன் படைக்கப்பட்டு, வேதங்கள் இறக்கப்பட்டு, தூதர்கள் அனுப்பப்பட்டனர்.

நிரந்தர ஏகத்துவச் செய்தியான 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்பதை முஅத்தின் முழு உலகிற்கும் கூறும் போது, அவற்றை மக்களும் கூறி, அதன்படி செயற்பட வேண்டும். அதுவே அவர்களுக்கு இவ்வுலகில் சந்தோசத்தையும், மறுமையில் வெற்றியையும் கொடுத்திடும்.

அதான் என்பது திரும்பத் திரும்ப காதுகளில் விழும் ஓசையாகும். அது உள்ளத்திற்குள் நுழைந்து, யதார்த்தமாக உயிருடன் உறவாடுகிறது. அவ் உயிரை இருளிலிருந்தும், மறதியிலிருந்தும் காப்பாற்றி, இம்மை, மறுமையின் வெளிச்சம், நிதர்சனம் என்பவற்றுக்கு கொண்டு வருகிறது. அதானுக்கு கட்டுப்படுவோராய் இருங்கள். நிச்சயம் வெற்றிபெறுவீர்கள்.